# மெழுகுச் சிறகுகள்

ஆசிரியர்
'எழுச்சிக் கவிஞர்'
**வ.கோ. சண்முகம்**

தொகுப்பாசிரியர்
**எஸ். ராஜகுமாரன்**

தமிழ்க்கூடம்

* மெழுகுச்சிறகுகள்/ Mezhugu Chiragukal * ஆசிரியர் : வ.கோ. சண்முகம் / Author : Vaa.Ko.Sanmugam * கவிதைகள்/ Poems * தொகுப்பாசிரியர் : எஸ்.ராஜ குமாரன் / Compiling Editor : S. Raaja kumaran * முதற்பதிப்பு: 1978 / First Edition : 1978 * மறு மதிப்பு : 2007 / Re-edition : 2007 * பதிப்பாளர்: பரிமளா ராஜகுமாரன் / Publisher : Parimala Raajakumaran * அட்டை வடிவமைப்பு: சித்தன் கலைக்கூடம் / Wrapper Design : Sithan Kalaikkoodam * நூல் வடிவமைப்பு : இரா. செல்வ சுந்தரம் / Book Design : R.Selvasundaram * உள் ஓவியங்கள் : டாக்டர். மோகன் கனகசபை-திருவையாறு குருபாலா / Inner Drawings : Dr. Mohan Kanagasabai-Thiruvaiyaru Gurubala * ஒளிஅச்சு: தமிழ்க்கூடம், சென்னை - 17 / Laser Typeset : Thamizk kuudam, Chennai - 17.

பக்கங்கள் 80 / Pages 80

விலை ரூ. 40/- / Price Rs.40/-

தமிழ்க்கூடம்

புதிய எண்.14, சிவாஜி தெரு, தி.நகர், சென்னை - 600 017.

செல்பேசி : 98401 24602

Thamizkkuudam, New No.14, Sivaji Street, T.Nagar, Chennai -17.



தமிழறிஞர் நூல்கள் நாட்டுடமை திட்டத்தின் கீழ்,
2007-2008 தமிழகஅரசு நிதிநிலை அறிக்கையின் வாயிலாக
'எழுச்சிக் கவிஞர்' மாவெண்கோ என்ற
வயலூர்சண்முகம் அவர்களின் நூல்களை நாட்டுடமை
ஆக்கிய தமிழக முதல்வர்
'முத்தமிழறிஞர்' டாக்டர் கலைஞர்
அவர்களுக்கு நன்றி!

## 'எழுச்சிக் கவிஞர்'
# வ.கோ. சண்முகம்
## வாழ்க்கைக் குறிப்பு

| | | |
|---|---|---|
| இயற்பெயர் | : | வ.கோ. சண்முகம் |
| புனைப்பெயர்கள் | : | மாவெண்கோ, செம்மல், வயலூர்சண்முகம் |
| பிறப்பு | : | 20.02.1924 |
| பிறப்பிடம் | : | வயலூர் கிராமம், திருவாரூர் மாவட்டம் |
| பள்ளிக்கல்வி | : | போர்டு ஹை ஸ்கூல் - திருவாரூர் |
| கல்லூரிக்கல்வி | : | இண்டர்மீடியட், அண்ணாமலைப் பல்கலைக் கழகம் - சிதம்பரம் |
| படைப்புகள் பிரசுரமான பத்திரிகைகள் | : | முரசொலி, திராவிட நாடு, அறப்போர், கலைக்கதிர் |
| | : | பிரசண்ட விகடன், கண்ணன், விஜயா, தமிழ் சினிமா, கல்கி, கோகுலம், ஆனந்தவிகடன், மாதஜோதிடம், பால்யன் |

கவிதைகளின் காலம் : மரபுக் கவிதைகள் -
1940 முதல் 1980 வரை
புதுக்கவிதைகள் -
1970 முதல் 1980 வரை

நூல் விவரம் : 1.தெற்கு ஜன்னலும் நானும்
(மரபு மற்றும் புதுக் கவிதைகள் தொகுப்பு)

: 2.டாணா முத்து
(சிறுவர் கதைப் பாடல்கள்)

: 3. சின்னப்பூவே மெல்லப் பாடு
(குழந்தைப் பாடல்கள்)

: 4. எதைத் தேடுகிறாய்?
(தத்துவக் கவிதைகள்)

: 5. நடந்துகொண்டே இரு
(இளைஞர் கவிதைகள்)

: 6. மெழுகுச் சிறகுகள்
(மரபுக் கவிதைக் கதைகள்)

: 7. புதிய தெய்வம்
(புதுக்கவிதை நாவல்)

: 8. அன்னை ஒருத்தி
(அஷ்டலட்சுமி காவியம்)

: 9. உப்பு மண்டித் தெரு
(புதுக்கவிதைச் சிறுகதைகள்)

: 10. வென்றார்கள் நின்றார்கள்
(பல்துறை சாதனையாளர்கள் பற்றிய கவிதைகள்)

: 11. தைப்பாவாய்
(மொழி, பண்பாடு சார்ந்த கவிதைகள்)

: 12. பாருக்கெல்லாம் பாரதம்!

| | |
|---|---|
| இலக்கிய நண்பர்கள் | : தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர், 'உவமைக் கவிஞர்'சுரதா, கவி.கா.மு.ஷெரீஃப், திரைப்பட வசனகர்த்தா ஆரூர்தாஸ், 'டார்ஃபிடோ' ஜனார்த்தனன், திரைப்படத் தயாரிப்பாளர் இராம.அரங்கண்ணல், 'சின்னக்குத்தூசி' தியாகராஜன் |
| இறுதி வாழ்வும் மறைவும் | : 23.07.1983<br>: தளத்தெரு கிராமம், காரைக்கால் (புதுச்சேரி மாநிலம்) |

# பதிப்புரை

இலக்கியத்தில் காலம்தோறும் பல புதிய வடிவங்கள் தோன்றிக் கொண்டேதான் இருக்கின்றன. கையாளும் படைப்பாளியின் கலைப்படுத்தும் ஆற்றலுக்கேற்ப அவை வெற்றியோ தோல்வியோ அடைகின்றன. இந்த இலக்கிய வடிவங்களில் எளிமையானவற்றை தேர்ந்தெடுத்து, பலரும் பயன்படுத்தத் தொடங்கும்போது அவை பரவலான வெளிச்சம் பெறுகின்றன. கடினமான சில வடிவங்கள் கடந்த கால வடிவங்களாகி விடுகின்றன.

சங்க இலக்கியத்தில் கையாளப்பட்டிருக்கும் கடுமையான பல தமிழ் மரபுக் கவிதை வடிவங்கள் இத்தகைய பட்டியலில் அடங்கும். இதில் வடிவத்தை வைத்துக் கொண்டு, அதில் தனது புதிய முத்திரைகளைப் பதித்து, எளிதாக பழைய இலக்கணத்தை சற்றே உடைத்து, அதில் கவிதை வார்த்தோர் குறைவான எண்ணிக்கையிலேயே அடங்குவர். இதைத்தான் நம் மகாகவி 'புதியன விரும்பு' என புதிய ஆத்திசூடியில் குறிப்பிடுகிறான்.

பழைய வடிவம், அதில் ஏற்கனவே பாடப்பட்ட பழைய 'பாடுபொருள்'கள், இப்படியேதான் தமிழ்மரபுக் கவிதையின் வரலாற்றில் சலிப்பூட்டும் சக்கைகள் நிறைந்து

காணப்படுகின்றன. இதில் மொழித் தேர்ச்சி மட்டிலும் அடைந்த 'பண்டிதர் பெருமகன்'களின் பங்கு அதிகம். அழகியல் இன்றி, உணர்ச்சி இன்றி, புதுமை இன்றி, இலக்கணம் மட்டும் இருக்கும். இதுவா நவகவிதை ?

இந்தச் சட்டத்தை உடைத்தவர் 'எழுச்சிக் கவிஞர்' வ.கோ.சண்முகம். மின்னித் தெறிக்கும் புதிய சொல்லாக்கம், அலுப்பூட்டாத எளிய கதை சொல்லும் பாணி, புதிய வகை உவமைகள், உருவகபிரமிப்புகள் இப்படியாக வார்க்கப்பட்டவைதான் அவரது இந்த நூல். கவிதைக்குள் கதை சொல்வது என்பது கத்தியின் மேல் நடப்பது மாதிரி! இந்தக் கலையில் கைதேர்ந்தவராக தன்னை வெளிப்படுத்தியுள்ளார் வ.கோ. சண்முகம்.

காப்பியம் என்னும் வடிவத்தை எளிமைப்படுத்தி வ.கோ.சண்முகம் வார்த்திருக்கும் இந்த 'கவிதைக் கதை'கள் தமிழ்க் கவிதை வரலாற்றுக்கு சிறப்பு சேர்க்கும் பதிவுகள் என்பதில் சந்தேகம் இல்லை.

'முத்தமிழறிஞர்', 'செம்மொழிச் செம்மல்'; தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்களால் நாட்டுடமையாக்கப்பட்டுள்ள 'மாவெண்கோ' என்ற புனைப்பெயர் தாங்கிய வ.கோ. சண்முகம் அவர்களின் இந்த நூலை இத்தருணத்தில் மீண்டும் வெளியிடுவதில் 'தமிழ்க்கூடம்' புளகாங்கிதம் அடைகிறது!

நேசமிக்க
**எஸ்.ராஜகுமாரன்**
பதிப்பு மற்றும் தொகுப்பாசிரியர்

## உள்ளே...

விண்ணுயர வெண்புறாக்கள் பறந்த நாடு !
வேங்கைகளைப் படைக்குலமாய்க் கொண்ட நாடு
எண்ணுயரும் எழுத்துயரும் வளத்தை எல்லாம்
இனிக்கின்றக் குயில்வாய்கள் கூவும் நாடு !
'தண்' ணென்ற அறம் வளர்த்தும் அதனைக்காக்கத்
தணல் போன்றே வீரத்தைத் துணையாய் வளர்த்தும்
கண்மணிபோல் தன்னுரிமை போற்றி வந்தக்
கவின் இதய புரி மேலே பகையின் பாய்ச்சல்!

உள்ளுக்குள் உள்ளிருந்தே உளவு சொல்லி;
உரிமைகளைக் கருவாடாய் விற்கத் துணிந்த
கள்ளமனப் பொய்வஞ்சர், சூதுக் காரர்,
கவ்வ வந்தோர் கால்தூக்கி முத்த மிட்டார் !
பள்ளத்தில் சுதந்திரத்தை உருட்டி விருட்டார் !
பட்டாளம் சிதறிற்று ! மனித ரத்தம்
வெள்ளமெனப் பெருக் கெடுத்தே ஓட லாச்சு !
வெறிக்கழுதை அரியணையில் அமர லாச்சு !

இகல்வெல்ல முடியாமல் வீழ்ந்த அந்த
இதயபுரத் தலைநகரின் குட்டி வீதி !
பகல் முளைக்கத் தொடங்குகின்ற அரும்பு வேளை !
படுத்திருந்த கிழப்பாயைச் சுருட்டி வைத்துப்
புகையிலையின் தூள் சேர்த்து 'புளவு' போட்டுப்
பூங்கண்ணி ஆத்தாள்தான் வெளியே வந்தாள் !
நகல் எடுத்துக் கணிப்பதுபோல் உற்றுஉற்று
நகரத்தின் கொடுமைகளைப் பார்த்தாள் ; கொதித்தாள் !

சங்கிலிப்போல் பரம்பரைகள் பிணைந்து நீண்டு ;
சரித்திரத்தில் புகழ்வெளிச்சம் பதியச் செய்த
மங்களமாம் உதயங்கள் எத்த னையோ?
''மனைவிளக்கே ! உயிர்த்தாயே ! எனது தொட்டில்
சங்கீதம் பாடியதும் உன்ம டியில்தான் !
தலைக்குயர்ந்த என்மகனும் அவனுக்குரிய
சிங்கத்தின் ; இளமொக்கின் தொட்டில் தளையும்
சிந்துதிர்த்தே ஆட்டியதும் நீயே அன்றோ?''

''உன்மேனிக் காயங்கள் பகைவன் வைத்த
உலராத ரணக்குழிகள் ; உதைத்த உதைகள்
என்மேனிக் காயம், ரணம், உதைகள் அன்றோ !
'இட்டுவக்கும்' கருமமதைத் தவித்துப் பாழும்
வன்முறையில் எடுத்துவக்கும் பழக்கம் இல்லா
வயணமுறு பண்பாடா குலைய வேண்டும்?
தன்போக்கில் வாழ்வெடுத்த அன்பு - ஆசைத்
தாயகமே ஏன் வீழ்ந்தாய்? ஏனோ தாழ்ந்தாய்?''

இவ்வாறாய்ச் சிந்தனைகள் நெய்து நொந்தே
ஏறுகின்ற வெயிலிலும் நடுங்கி நின்றாள் !
தெவ்வர்படை கொட்டுகின்ற வெற்றி முரசம்
தீச்சரம்போல் அவள்செவிக்குள் நுழைய லாச்சு !
எவ்வளவோ கண்ணீரைக் கண்ட வள்தான் !
எத்தனையோ தோல்விகளைச் சுமந்த வள்தான் !
அவ்வளவும் தூ சாக, நாடு வீழ்ந்த
ஆபத்தே பெரிதாகக் கருத லானாள் !

அங்கத்தில் 'அமாவாசை' நிறமே எனினும்
'அம்மா' வென முகம் நோக்கி அழைத்துக் கூவி
பங்கமிலா 'பௌர்ணமி' போல் பால்சு ரக்கும்
பசுவதனைப் பூங்கண்ணி எட்டிப் பார்த்தாள் !
தங்கந்தான் நெருப்பஞ்சி அப்பால் போமோ?
சிங்கந்தான் சிற்றெலிக்கு அஞ்சு மாமோ?
சந்தனந்தான் அரைகல்லால் மருளல் உண்டோ?
சின மூச்சை அறியாப்பசு கத்த லாச்சு !

வாத்தியமே எதிர்வந்தே அழைத்தாற் போல,
மகரயாழ் மேல் மென்தென்றல் நடந்தாற் போல
'பாட்டி' என அழைத்தபடி பேரன் வந்து
பழகுகின்ற மழலையதன் பாடம் சொன்னான் !
காத்திருந்தப் பெருவெள்ளம் கடலில் குதித்தக்
கணக்காகப் பாட்டியவள் பேரக் குஞ்சைச்
சேர்த்தெடுத்து அவனுடலில் நூறுநூறு
தேன்முத்தம் பெய்தபடி விசும்ப லானாள் !

பசுவாச்சு ! சிசுவாச்சு ! அதன்பின் இந்தப்
'பழங்கால' மனுஷியவள் விழிக்கோ ணத்தின்
அசைவினிலே பழக்கடையின் பக்க மாக
அவள் காக்கும் மருந்துகளின் பெட்டி யாகப்
பசிதாகம் சோர்வகற்றும் பயிர்கள் குடும்பம்!
பழுத்தாலும், காய்ந்தாலும் பயனே ஆகும்-
வசையறியா மா, வாழை தென்னைப் பலாவின்
வம்சங்கள் ! வழிவழியாம் உயிர்த் தொண்டர்கள் !

வீதியிலே சந்தடிதான் தடித்துக் கூச்சல்
விம்மல்கள் அலறல்கள் பெருகப் பெருக
ஏதேதோ தடுமாற்றம் ! ஐயம் அச்சம் !
எல்லாமே அவள்நினைக் குடையலாச்சு !
சோதனையின் கடைசி நாள் ! இதய புரத்தின்
சுவாசத்தை அவள் நுகரும் கடைசி நேரம் !
மீதியுள நாழிகையில் 'அது' நடந்தாக
வேண்டியதே ! தவிர்ப்பதற் கோ, வழியும் இல்லை !

நொண்டிச்சி-அவள்தோழி வாழ்வுத் தடத்தின்
நொடிப்புகளில் வீழ்ந்துழன்ற 'பேதை' ! ஆனால்
சண்டாளன், மாபாவி சண்டைக் காரன்
சாட்டியடி வாங்காமல் ரோசத் தோடு
'நண்டுக்கால் தீவு'க்கே ஓடிப்போக
நல்முடிவு செய்துவிட்டாள்! தன்கண வனையே
குண்டாகத் தூக்கித்தன் முதுகில் சுமந்தே
கோட்டை மதில் தாண்டுகிறாள்! வியப்பு! நகைப்பு!

குத்தவைத்தக் குதிரைக்கால் லாடம் போலக்
குப்புறவே தொங்கு நரை மீசை துள்ளக்
கொத்துகின்ற கழுகுக்கண் சிவக்க, மதுவைக்
குடித்தபடி மணிக்குமணி புதுசு புதுசாய்ப்
'பத்தினிகள்' மாற்றியபடி படுத்து ருண்டே
பதர்நெஞ்சன் மதாங்கனாம் சர்வா திகாரி,
சத்தியத்தைக் கல்லறைக்குள் தள்ளு கின்றச்
சட்டங்கள் போட்டிட்டே கொக்க ரித்தான் !

`இதயபுரத் தலைநகரைச் சுத்தம் செய்ய,
எழில்கொஞ்சும் இளமையுடன் வலிமை காட்ட
வதிகின்ற மக்களிலே அழகு; இளமை
வலுவுள்ள ஆடவர்கள்; பெண்டிர்; குழந்தை
நிதியுள்ளோர் ஆகி யோரே இருக்க வேண்டும்
நலிகிழங்கள், நோயுள்ளோர், வறியோர் எல்லாம்
உதயங்கள் ஐந்துக்குள் நகரை விட்டே
ஓடிடவே ஒழிந்திடவே வேண்டும்' என்றான் !

அன்புடைய நண்டுக்கால் என்னும் தீவை
அண்மையிலேதான் மதாங்கன் தன்வசப் படுத்திக்
கொண்டிருந்தான் தரித்திரங்கள், நோய்க் கிழங்கள்
கூடாரமாய் அதையாக்கத் தீர்ப்ப ளித்தான் !
வண்டுகளும் பாம்புகளும் அந்தத் தீவில்
வாய்திறந்த படியிருக்கும் ; விஷமே விளைச்சல் !
நொண்டி முடம் வகையறாக்கள் மெல்ல மெல்ல
நொந்தொழிய ரகசியமாய்த் திட்டம் வகுத்தான் !

பூங்கண்ணி ஆத்தாளின் புதல்வ னான
புலிநெஞ்சன் வலைநெஞ்சன் 'வெண்ணை வெட்டி'
பாங்கான உத்தியோகம் ஒன்றி லேஅவன்
பசைபோட்டுத் தனைஒட்டிக் கொண்டி ருந்தான்!
ஆங்காரம், அதிகாரம், தியாகம் எல்லாம்
ஆத்தாளின் சொத்தாக இருந்த நாளில்
ஏங்காமல் அவனுக்கே பழைய ஆட்சி
இட்டதொரு பிச்சைதான் அந்தப் பணியாம் !

சுதந்திரத்தைப் பலிகொடுக்கத் திட்டம் போட்ட
துரோகிகளின் கும்பலுக்குள் மூத்த ஆளே
பதர்புத்தி சோதாப்பயல் புலிநெஞ் சன்தான்!
பத்துமாதம் சுமந்திளைத்துப் பெற்றெடுத்து
இதம்பதமாய் வளர்த்தவளின் செவிக ளுக்கே
எள்ளளவும் தன் செயல்கள் எட்டா வாறு
சதிக்கூத்தைத் தந்திரமாய் ஆடிவந்தான் !
சாணத்தைச் சந்தனமாய் தாய்ம தித்தாள் !

தன்வசத் திட்டமதன் கடுமை குறைக்கத்
தலைநகரை விட்டு வெளி யேறுவோர்கள்
அன்பனுக்கோ ஆசைக்கோ உரிய தான கள் !
ஆவிதனை ஒத்ததொரு உடமைமட்டும்
இன்னலெதும் அரசுக்கே தந்தி டாமல்
இயன்றவரை தம் முதுகில் சுமந்து செல்ல
நன்மையாய் ஓர்சலுகை கொடுத்திருந்தான் !
நஞ்சிருக்கும் இடமெல்லாம் போர்வை உண்டே !

அடுத்தடுத்துப் பலபேர்கள் அண்டா குண்டா;
ஆடுகன்று பெட்டிசட்டி என்பவற்றை
இடுப்பொடிய முதுகேற்றிச் சுமந்து சென்றார்
இப்படியே தலைநகரே இளைக்க லாச்சு !
தடுத்திடவோ, மறுத்திடவோ இயன்றி டாமல்
தள்ளாத வயதினரைப் பிரியா விடைகள்
கொடுத்தனுப்பிச் சுற்றத்தார் தேம்ப லானார் !
கொடுமை இது என்றலறிப் புலம்ப லானார் !

பொற்குயிலி புலிநெஞ்சன் மனைவி ! நல்ல
புத்தியுள பெண்ணேதான்! தன்ம ணாளன்
நெற்குதிரின் உள்ளிருக்கும் எலியைப் போல
நீசனாகி விட்டதிலே மாளாத் துயரம் !
''கற்கண்டே ! மலர்ச்செண்டே ! கோபிக்காதே !
காலத்தின் மின்னலெது?'' 'அதிர்ஷடம்' தானே!
விற்கணைபோல் 'அது' வந்தே நமது வீட்டின்
விட்டத்தில் குந்துதடி, விட்டி டாதே !

''அரண்மனையில் புதுப்பதவி எனக்கே கிடைக்கும் !
அட்டிகையும் ஒட்டியாணமும் உனக்கே கிடைக்கும் !
முரண்பட்டுக் கிழவியிடம் உளறி டாதே !
மோசம் வரும் !'' என்றெல்லாம் நைப்பு காட்டி
உரம்பெற்ற அவள்மனத்தை ஊமையாக்கி
ஒத்தாசை செய்வதற்கும் பழக்கிவிட்டாள் !
'வரம்கொடுக்கும் குலதெய்வம்' என்றே அவனும்
வந்தபுது கொடுங்கோலனை வாழ்த்த லானாள் !

முதலையிடம் கண்ணீர்க்கா பஞ்சம் உண்டு?
முன்வந்து பின்சுற்றி அன்னை தன்னை
எதுஎதுவோ உணர்த்திட்டே வணங்க லானான் !
"எப்படிநான் அம்மா உனைப்பிரிவேன் ?" என்றான்
"கதறிஇனி தடுக்கஇனி என்ன உண்டு?
காலத்தைத் தாழ்த்தாமல் கிளம்பு!'' என்றான்
விதி தனக்கே வேலியிட லாமா?'' என்றே
வேதாந்தக் கூச்சல்களை அவிழ்த்து விட்டான்!

மகன் பேச்சு தாயவளைத் தூண்ட லாச்சு !
மற்றவர்போல் எனக்குள்ள பாசத்துக்கும்
நகம் சதையாய்ஒட்டியுள்ள பந்தத் துக்கும்
நாளைமுதல் தொடர்பில்லை ! தானே தனிதான் !
முகம்மெல்லாம் துளிர்க்கின்ற வியர்வைத் துளிகள்
மூச்செழுந்தே ஆடுகின்ற முதிய மார்பு
அகம் முழுதும் பரவுகின்ற துயரம் தன்னை
அச்சடித்துக் காட்டிடவே கிழவி தவித்தாள்!

பழகிவந்த சுற்றங்கள்; நட்பு; வாழ்க்கைப்
படகாக மிதந்திருந்த வீடு; தனக்கு
முழு உதவி நாள்தோறும் தந்து வந்து
முறை தவறாக 'கருப்பம்மா'; 'மருந்துப்பெட்டி';
அழகுமணித் தேர்போன்ற பேரப்பிள்ளை;
ஆசைமகன்; அவன்துணைவி எல்லோரிடத்தும்
தழுதழுத்தக் குரலினிலே புலம்பித் தேம்பிச்
சட்டத்தின் அடிபணியத் துவங்க லானாள் !

கிழவியவள் 'நண்டுக்கால் தீவு' செல்லக்
கிளம்புகின்ற தருணத்தில் அரண் மனையில்
அழைத்ததாக ஓடிவந்தே ஒருவன் கூற
''அம்மா இனித் தயங்காதே போய்வா!'' என்றே
குழறியபடி புலிநெஞ்சன் ஆள்பின் போனான்!
கும்பிட்டே அத்தையவள் காலில் வீழ்ந்தே
அழுதிட்ட மருமகளைப் பேர னோடே
அணைத்தபடி வாழ்த்துரைகள் சொன்னாள்! எழுந்தாள்!

எப்போதும் பூங்கண்ணி 'கமுக்க' மாக
எல்லாமே செய்கின்ற பழக்கம் உள்ளாள்!
இப்போதும் அப்படித்தான் மகனி டத்தோ-
இல்லத்தரசி பொற்குயிலி தன்னி டத்தோ-
உப்புப்பை ஒன்றுக்குள் திணித் திருந்த
'உயிருக்கும் உயிரான' உடமை பற்றித்
தப்பியும்ஓர் வார்த்தையதும் சொல்லவில்லை !
தவறென்றே மற்றவரும் கேட்கவில்லை !

கைகுவித்தே தன்வீட்டை வணங்கிப் பின்னர்
கார்முகிலின் கிழிசலுக்குள் தொலைவில் தெரிந்த
'ஐயை' எனும் தெய்வத்தின் கோவில் வணங்கி
'அறம்', 'நீதி' என்பதாக ஏதும் இருந்தால்
'மெய்எழுந்தே சீறட்டும்' என்று முணுகி
வீதிதனில் காவலர்கள் விரைவுப் படுத்த
பைச்சுமையைத் தன்னுடலின் சுமையினோடு
பத்திரமாச் சுமந்தபடி பயணம் ஆனாள் !

நடுஇரவில் துயில்கலைந்தே விழித்த சிங்கம்
நல்லிசைதான் கிடைக்காமல் கத்தல் போலப்
படபடத்தே பாய்ந்திட்டான் ! சினத்தின் தீயைப்
பரவவிட்டான் ; குதித்திட்டான் மாதங்க கன்தான் !
வெடவெடத்தே நின்றார்கள் காவலர்கள்
''வேலெதற்கு? வாள் எதற்கு உங்க ளுக்கே?
கடலுப்பைச் சோற்றுக்கு அதிகம் சேர்த்துக்
கட்டிடுங்கள் புடவைகளை இனிமேல்'' என்றான்!"

இருவீரர் நடுவினிலே கைதி யாக
இளித்தபடி நின்றிருந்தப் புலிநெஞ் சன்தான்
''பெருமனசு பண்ணுங்கள்! நானே நாளைப்
பிற்பகலில் தர்பார்தான் கூடு முன்னே
தருமதுரை மகராசா உங்கள் ளிடத்தே
தலைதன்னைக் கொடுத்தேனும் அதனைக் கொணர்ந்து
தருகின்றேன் சத்தியமாய் ! கலகம் செய்தால்
சரக்கினுக்கே ஆபத்து நேரும் !'' என்றான்.

ஆசைக்கு நாயகியாய் ஆன வள்தான்
அடுத்துவரும் இதயபுர மகிஷி தன்னின்
நீசக்கயல் விழிகள் மேல் கண்ணீர் அருவி
நெளிவதனைக் கண்டுவிட்ட மாதங் கன்தன்
மீசைக்குள் நெருப்பேறல் போல்து டித்தான் !
''விசும்பாதே என்கண்ணே! அந்தவைரம்
மேசைக்குள் வரும்வரைக்கும் தர்பா ரில்நான்
வீற்றிருக்கப் போவதில்லை! உண்மை!'' என்றான்.

பொன் அன்னம் கண்ணீரை 'ஒத்தி' வைத்தாள் !
''புதுத்திருடர் எவருமில்லை புலியோ, எலியோ
என்எண்ணம் தனைஅறிந்து முந்திக் கொண்டார் !
எனக்கூறித் தொடர்வதற்குள் அவளுள் ளத்தில்
மின்னலது அடித்தாற்போல் ஏதோ நினைவு
வீசிற்று மறுகணமே மதாங்கன் செவிக்குள்
தன்ஊகம் ஒன்றினையே கிசுகி சுத்தாள் ;
சாடையினால் புலிநெஞ்சன் தன்னைக்காட்டி !

பிடித்தவனை என்பின்னே இழுத்து வருவீர்!
'பெப்பே' என நமை இவனே ஏமாற்றிவிட்டான்!
இடித்ததுபோல் ஆணையதை உதிர்த்த மதாங்கன்,
எவரையுமே நம்பாமல் தானே குதிரைப்
பிடித்ததிலே அமர்ந்திட்டான் அன்னம் தன்னைப்
பின்அமர்த்தி, நகர்எல்லை நோக்கிப் பறந்தான்!
கடிபட்டால் தடிக்காதா? புலிநெஞ் சன்தன்
கைகளிலே விலங்கேற்றி இழுத்துப் போனார்!

அரும்புக்குள் சிறையிருந்த நறும ணந்தான்
ஆனந்த சுதந்திரத்தைப் பெற்றுக் கிளம்பித்
திரும்புகின்ற திசைஎங்கும் உலவுகின்ற
செவ்வந்தி வேளையது! பணிமு டித்துப்
பெரும்புவியின் வாழ்த்துக் களைப் பெற்றுக் கொண்டே
பீடுடனே பரிதியவன் மேற்கே போனான்!
விரும்பாத விபரீத யாத்தி ரைக்கே
விதித்திருந்த கெடுவதுவும் முடிந்து போச்சு!

நண்டுக்கால் தீவடையப் பயணம் செய்யும்
நாலைந்து முதியோருடன் தானும் சேர்ந்து
கொண்டவுடன், பூங்கண்ணி மீண்டும் மீண்டும்
கும்பிட்டே இதயபுரம் தன்னை வாழ்த்தி;
"ஒண்டவந்த பிடாரியதே ஊர்ப்பி டாரியை
ஓடென்றே விரட்டியதாய்க் கதைகள் சொல்வார்
கண்டுவிட் டோம் நாமின்று அனுப வத்தில் !
காலத்தின் கொடுமையிது !" என கலங் கிட்டாள்.

அப்போதில் அவர்களுக்குப் பின்னால் ஏதோ
ஆட்கள்வரும் இரைச்சல்கள். ஆர வாரம் !
குப்பத்தை மாந்தோப்பைத் தாண்டி விட்டால்,
கூப்பிடுகிற தொலைவில்தான் தீவின் எல்லை
இப்படியோ, அப்படியோ திரும்பு வதற்குள்
ஏழெட்டுக் குதிரைகளில் காவல ர்கள்
''அப்படியே நில்கிழமே ஓரங்கு லமும்
அசையாதே!'' என்றுருமிச் சூழ்ந்து கொண்டார்.

சற்றேனும் இதைஎதிர்பார்க் காத கிழவி
''சனியன்களா! இது என்ன புதுக்கு ழப்பம்?
புற்றுகளைப் பாம்புகட்கு விட்டு விட்டே
போகின் றோம் கரையானாய்! இன்னும் என்ன?
வற்றல்களாய் சுள்ளிகளாய் நடைப்பிணங்களாய்
வாயிருந்தும் ஊமைகளாய் செல்கின்றோமே !
சுற்றிச்சுற்றி எமைவிரட்டி அலைக்கழிக் காதீர்
தொலையுங்கள் அப்பாலே. எனகர் ஜித்தாள்!

பூங்கண்ணி இவ்வாறு கத்தக் கேட்டுப்
பொரிதின்று கொண்டிருந்த மற்றோர் கிழவி
''போங்களடா! முடிச்சவிழ்க்கும் யுக்தி யாஇது?
பொழைப்புக்கு வேறிடத்தைப் பாருங்க'' ளென்றாள்.
தாங்காத மதாங்கன்தான் வெகுண்டு சீறித்
தன்குதிரை விட்டிறங்கி ஓடி வந்தான்!
ஆங்காரமாய் பூங்கண்ணி தன்னை ஓங்கி
அடிக்காலால் உதைத்துதைத்தே உருட்டி விட்டான்!

''ஏய் கள்ளி ! கிழநாயே! வா வா! இங்கே
எடுத்தவிழ்த்து மூட்டையதைத் திறந்து காட்டு !
மாய்மாலம் எங்கேதான் கற்றுக் கொண்டாய்?
மகனுடனே நாடகமா ஆடு கின்றாய்?
வாய்மட்டும் காதளவு இருக்கே உனக்கு
வயசான காலத்திலா திருட்டுப் புத்தி?
நாய்போலப் புலிநெஞ்சன் கிடப்பான் என்றே
நம்பினேனே ! நரிபோல ஆகி விட்டான்! ''

என்றெல்லாம் மதாங்கன்தான் திட்ட லானான்!
இடறிவிழுந்து தள்ளாடியகிழவி தொலைவில்
நின்றிருக்கும் புலிநெஞ்சன் கைகளில் விலங்கை
நேத்திரத்தால் பார்த்தவுடன் திகைத்துப் போனாள்!
''பன்றிகளே என்மகன்தான் செய்த தென்ன ?
பழிவிலங்கை என்கைகளில் மாற்றிமாட்டிக்
கொன்றிடுங்கள் எனை யேனும் ! என்பிள் ளையைக்
கொஞ்சமுமே வதைக்காதீர் ! விடுங்கள்!'' என்றாள்.

பொன் அன்னம் பொறுமைதனை இழந்தே, கிழவி
பூங்கண்ணி வசமிருந்த பைச்சு மையைத்
தன் கையால் பறித்தெடுக்க முயன்றாள் ! கிழவி
தடுத்தபடி, ''அடிபாவி நீயும் இந்த
வன்நெஞ்சர் கையாளா? வெட்கம் கெட்டு
வந்தவனுக்கே முந்தானை விரித்திட்டாயோ?
என்உயிரே போனாலும் இதனை இனிமேல்
யாரிடத்தும் தரமாட்டேன் போ போ!'' என்றாள்.

முடிச்சுக்குள் இருப்பதெது என்ப தையே
முன்பேயே அறிந்திடாமல் போன தற்குத்
துடித்தபடி குறுகுறுக்கும் தன்னுள் ளத்தின்
சுடுநெருப்பில் புலிநெஞ்சன் சிக்கிக் கொண்டு
அடுத்தபடி நடப்பதே தோ எனப்ப யந்தே
அடித்தசிலைக் கல்லாகக் குனிந்து நின்றான் !
''எடுத்ததுதான் எடுத்தாளே, என்னி டத்தில்
ஏதேனும் சொன்னாளா?'' எனக்கு மைந்தான்.

கண்இமைக்கும் நேரத்தில் மதாங்கன் தனது
கட்டாரியால் கிழவியையே குத்தி விட்டான் !
புண்வாயில் பொங்குகின்றக் குருதி தன்னில்
புரண்டிட்டப் பைச்சுமையைப் பிடுங்கி எடுத்தே
பெண்பாவிப் பொன் அன்னம் கையில் தந்தான் !
பேய்மகளும் ஆவலுடன் வாங்கிப் பிரித்தாள் !
மண்! மண்! மண்! அவ்வளவும் புழுதிமண்ணே !
மற்றபடி வெறெதுவும் பைக்குள் இல்லை !

ஏமாற்றம், அவமானம் நெருப்பாய்த் தீய்க்க
''ஏய் ஆத்தா எங்கேயடி அந்தந கைதான்?
பேமாத்து வேலையெலாம் செய்தாயோ உன்
பிள்யவனுக்குடனேயே கிரேச்சே தம்தான்!
சாமான்தான் உன்பாட்டன் சொத்தா? இல்லை,
சந்தைக்கருவாடா? ராஜாங்கத்தின்
சீமான்கள் விவகாரம் ! உனக்கேன் வம்பு?
சீக்கிரமே சொல்லித்தொலை!'' என்றாள் அன்னம்.

தாயருகே பதைபதைத்தே ஓடிவந்த
தனயனவள் துலாச்சின்னம் பற்றிக் கேட்டான்!
வாயருகே வழிந்தோடும் ரத்தம் துடைத்தே
''வழிவழியாய் என்குலத்தைத் தோற்றுவித்தத்
தாய்மண்ணை; என்மூச்சை; வாழ்வை வளத்தைத்
தந்திட்டப் பொன்னமண்ணைப் புனித மண்ணை
ஆய்ந்தெடுத்தே கொண்டுவந்தேன் உயிருக் குயிராய்
அதனையே நான்துதித்தேன்! மதித்தும் வந்தேன்!

பிறப்பெடுத்தே; உடல்வளர்த்தே; இன்ப துன்பப்
பின்னல்களால் என்வாழ்வை நெய்து காத்தும்
அறப்பணிக்கே எனைக் கொடுத்த இந்த மண்ணின்
அணு அணுவாம் தூசிகளே எனது மூச்சு!
இறப்பெனினும் தாய்நாட்டு மண்ணின் மேலே
இழுத்துவிடும் மூச்சதுதான் நிற்க வேண்டும்!
சிறப்பென்றும் வேறுண்டோ? அடிமையாகச்
செத்துவிழ என்மனந்தான் ஒப்ப வில்லை !''

''அதனாலே தீவுக்கும் இந்த மண்ணை
அரும் பொருளாய்ச் சுமந்து போகின்றேன் நான்!
இதமான தலையணையாய் இந்த மண்ணை
எங்கே நான் சென்றாலும் வைத்துத் தூங்கி
என்றேனும் அதன்மேலே சாகவேண்டும் !
ஆசையெலாம் இவ்வளவே ! ஆனால், ஐயோ!
புதிதாகப் புதிராக நகைத்தி ருட்டில்
புகுத்தி எனை இங்கேயே கொன்று விட்டாய்...!''

மேல்தொடர முடியாமல் மூச்ச டங்க
விழிஇரண்டும் இருட்டிடவே பேச்சி முந்தாள்!
கால்வைத்த இடமெலாம் கோயி லாகும்
கண்ணி எனும் அவ்வன்னைக் கைதையும் முடியப்
பால்சுவையை இழந்ததொரு கன்றே போலப்
பாவிமகன் புலிநெஞ்சன் கதற லானான்!
சேல்கண்ணி அன்னத்தின் ஊகம் தனக்குத்
தீராப்பழி தந்ததினால் மதாங்கன் நொந்தான்!

அத்தையவள் செத்ததையும் ; ஆளன் கையில்
அரசாங்க விலங் கேறிக் கிடப்ப தையும்
சுத்துகின்ற சுற்றத்தார் பேச்சி னாலே
கண்டறிந்தப் பொற்குயிலி பிள்ளை யோடே
குத்துகின்ற அவமானம், சோகம் எல்லாம்
குடும்பத்தை அழித்ததெனக் கூனிக் கூசிச்
சத்தமிடா அழுகையுடன் அங்கே வந்தாள்!
சர்வாதி காரியவன் காலில் வீழ்ந்தாள்!

"கெட்டதொரு ஆசையதால் சகவா சத்தால்
கீழ்புத்தி அவருக்கும் முளைக்கலாச்சு !
பட்டதெலாம் போதும் இனி இதோ இதோ அத்தைப்
பாட்டியவள் உயிர்குடித்த எமன்தான்!" என்றே
விட்டெறிந்தாள் சிறுபேழை ஒன்றை! அன்னம்
விரைந்தோடி எடுப்பதற்குள் குதிரை மிரண்டே
நட்டநடு மார்பதனில் மிதித்துத் தள்ள
நடைபாதைக் கல்மோதி அவளும் செத்தாள்!

தன்புரட்டுத் தன்திருட்டுத் தாயைக் கொன்று;
தாரத்தைப், பிள்ளையினைச் சீர ழித்த
வன்கொடுமை தாளாத புலிநெஞ் சன்தான்
வாளெடுத்தே தன்மார்பில் பாய்ச்சிக் கொண்டான்!
மின்வெட்டும் நேரத்தில் மதாங்க னுக்கே
மிகப்பெரிய ஞானோதயம் தோன்றத் துடித்தான்!
தன்மட்டில் பரிகாரம் தேடி, ஆத்தாள்
தந்திட்டப் புதுப்பாடம் கற்றுக் கொண்டான்!

தேசத்தின் மண்ணதனை உயிருக்குயிராய்த்
தெய்வம் போல் துதித்துப்போற்றிகாத்த அந்தப்
பாசத்தின் பேரொளியை வணங்கி வாழ்த்திப்
பணிந்திட்டான் ! குவிந்திட்டான் குனியாத் தலையை
வாசத்துப்பூ மொட்டாய் அவள்வம் சத்தின்
வரிசைக்குப் புதுமுளையாய் இருந்த பேரன்
ஆசைக்கனி தனைவாரி அணைத்தான்! 'மக்கள்
அரசு'க்கே இனித்தலைவன் நீயே என்றான்!

நெடுநாளின் பாவமெல்லாம் கரைவ தேபோல்;
நெஞ்சிருந்த நஞ்செல்லால் வடிவ தேபோல்,
கடகடவெனக் கண்ணீரை உகுத்தான்! அன்பு
கருணை, அறம், மனிதாபி மானம்எல்லாம்
தடதடவென மதாங்கனுக்குள் பாயஉடனே,
தன்கொடியைக் கீழிறக்க ஆணை இட்டான்!
படைகளையும் தன்நாடு திரும்பச் செய்தான்!
பழங்கொடியே புதுக்கொடியாய் பறந்த தாங்கே!

-----------

சரித்திர முதுமை பெற்றச் சாகாத உதயம் அந்நாள்!
ஒருத்தனின் குரலே கோடி உத்தம ஞானக் குரலாய்ப்
பொருத்தமாய் முழங்க வந்தப் புனிதநாள் அறிவின்
தெளிவைத்
திருத்தியதோர் நன்னாள் மானுடன் தேவனாய் உயர்ந்த
பொன்னாள்!

நானூற்று நாற்பத் தெட்டு ஆண்டுகள் நகர்ந்த பின்பும்
வானூரும் நிலவாய்ப் பூவாய் வரலாற்று துணுக்குகளுக்குள்
தானூன்றி நிற்கும் 'கனுவா' தலயுத்தம் ரானா சங்கன்
ஊனூறும் குருதியை, வீர உரைகல்லாய்ச் செய்த யுத்தம்!

இந்தியத் துணைக்கண் டத்தில் இளம்பிறைக் கொடியை
நாட்ட
அந்நநாள் பாடுபட்ட அடலேறு நிகர்த்த பாபர்
சிந்தியகனல் மூச்சுக் குள்ளே சிக்கியே திணற லானான்,
சந்தன மேனி மன்னன் தறுகண்மிகுரானா சங்கன்!

சொந்தமாய்ப் படைசா தனங்கள் சொற்பமே
கொண்டோன் ஆனால்
சிந்தனை வளத்தில்; அன்னை தேசத்தின் மீதே வளர்த்து
வந்தநல் பாசம் தன்னில் வாஞ்சையில் குறைவே இல்லான்!
கொத்தவோ, வந்தாய்?' என்றே கொடும்பகைமேல்
பாய்ந்தான்ரானா!

தன்படைகள், தன்வீ ரத்தில் தருக்குற்றே கொக்க ரித்த
மன்னனாம் பாபர் என்ற மலையினையே மோதலானான்!
மின்னின வாட்கள் எல்லாம் மேகமும் ரத்த மாச்சு!
பன்னரும் பயங் ரப்போர்! பாபரே திகைக்க லானான்!

பாரினும் இளையோன் ஆனால் பாரம்பரிய சூழ்ச்சித்
திறனில்,
ஆபத்தைக் கனிக்கும் போக்கில், ஆட்களை 'நிறுக்கும்
கலை'யில்
தீபத்தைப் போன்ற புத்தி தீட்சண்யம் படைத்தோன் ரானா!
'லாபத்தின் பெட்டி' தூங்கும் இலக்கினைப் புரிந்து
கொண்டான்!

தன்பலத்தைக் கணித்தி டாமல் தாய்மண்ணைக் கவ்வ வந்த
வன்நெஞ்சர் பலஹீன த்தை வகையாகக் கணித்துக்
கொண்டான்!
பின்வாங்கல் போல ரானா போக்குகள் காட்ட லானான்
தன்னரும் படையும் குழம்ப தடந்தோளைத் தொங்கப்
போட்டான்!

அடுத்தடுத்தே பெற்ற வெற்றி ஆகாய மிதப்பில், போரின்
கடுத்தத்தைக் குறைத்துக் கொண்டே களியாட்டம்
போட்டான்பாபர்
படுத்தது வீரம்! வேகம்! பாசறை எங்கும் படையோர்
நடத்திய கேளிக் கைகள் நாட்கணக்கில் தொடர லாச்சு!

சக்கர வர்த்தி பாபர் தன்னையே மறந்து போனான்!
எக்காளம் முழங்க வில்லை ! யாழிசையே கேட்க லாச்சு
மக்காத வீரம் சுருண்டே மங்கையர் கும்பல் சூழ்ந்து
மொக்காகச் சிறகவிழ்க்கும் முந்தானை பின்னே போச்சு!

'கனுவா' என்னும் அந்த யுத்தக் களத்திலே பாபர் படையின்
மனமெலாம் கவர்ந்தி ழுத்த மதுவதே சாகஸி! அதுவோ,
தினுசிலே புதுசு! போதைத் திதிப்பிலே புதுசு ''ஆஹா
கனவிலே கூட இதுபோல் கண்டடே இல்லை!'' என்றார்

மண்ணாள்ளவந்த பாபர், மாவீரர் எல்லாம் அந்தக்
கண்ணள்ளும் மதுவைச் சுவைத்தே கரகம்போல்
ஆடலானார்!
பெண்ணுள்ள பாச றைக்குள் பீப்பாய்கள் குவிய லாச்சு!
தண்ணீரில் குளித்தி டாதோர், சரகஸி யில் நீந்த லானார்!

கள்ளக் கடத்தலாய் அந்தக் கனிச்சாறாம் சரகஸியை
மெல்லவே கொண்டு வந்த விற்பனை செய்த கனுவாக்
குள்ளனாம் அமர சிங்கை குலுக்கிய கரத்தினாலேள்
''உள்ளேவா'' எனவ ழைத்தே
உளவாளியாய்க் கொண்டான் பாபர்!

பூப்போல நெஞ்சம் கொண்டோன்; புலிபோல வீரம்
கொண்டோன்;
ஈப்போல பார்வை நூறு எப்போதும் பார்க்க வல்லோன்
சாப்பாடு தூக்கம் இன்றிச் சக்கர வர்த்தி தன்னைக்
காப்பாற்றும் பொறுப்பை ஏற்க காசிம்கான் குழம்ப
லானான்!

பாசறை மேசை யாவும், பாபரின் கோப்பைக் குள்ளும்
நேசத்தைப் பிடித்துக் கொண்டே நிறைந்திருந்த சாக
ஸியைப்
''மோசத்தின் வேஷம்! எமனின் முன்னோடி! வீரம்
வீழும்
நாசத்தின் பள்ளம்!'' என்றே நன்றாகக் காசிம் உணர்ந் தான்.

சாகஸி மதுவை அடங்காதத் தாகத்துச் சுவையி னோடே
வேகமாய் அருந்த லானான் வேந்தனாம் பாபரும்! அதனால்,
ஏகமாய், 'அந்த நேர இறைவ' னாய்' சாகஸி ஒன்றே
ஆகிட, ஆகிட ரானா ஆனந்தம் கொண்டான் மறைவில் !

பண்டிகை நாட்க ளைப்போல் பாபரின் ஆட்கள் எல்லாம்
கொண்டாட்டம் போட்டுக் குடிபோதை ஏற ஏறச்
சண்டையை மறந்தே போனார்! சந்தையில் கறிகள் விற்கும்
பெண்டுகள் போலத் தம்முள் பெரும்பூசல் போட்டுக்
கொண்டார்!

ஐம்பொறிகள் மரத்துப் போக; ஐம்புலன்களும்
ஓய்ந்துபோக,
கைகொண்ட காசிம் கான்தான் கண்ணீரோ டேதடுத்
ததையும்
மைகொண்ட வானம் போல மனமதை இருட்டாய்
ஆக்கிய
பொய்மதுகிறக் கத்தால் பாபர் பொருட்படுத்தவே
இல்லை, ஐயோ!

சாகஸி பானம் செய்த சதியினால் பாப ருக்குத்
தேகமே விஷமாய் ஆச்சு- தெரிவதெல்லாம் ரானா சங்கன்
ஏகஉரு வொன்றே ஆக, இடம், காலம் எல்லாம்
மறந்தான்!
நாகுழறி ரகசி யத்தை நழுவவே விட்டு விட்டான்!

புகையிலை விரித்தால் போச்சுசு புதுமணப்பெண்
சிரித்தால் போச்சுசு
வகையுறு கல்வி இல்லான் வாய்திறந்தால் போச்சு!-
அதுபோல்
அகழ்போன்ற ரகசி யத்தை அவிழ்த்தால் பாப ரேதன்
பகைவின் "பல கீனத்தைப் 'பல'மாக ஆக்கி விட்டான்!

பதுங்கியதோர் வேங்கை சீறிப் பாய்வதேபோல் ரானா
சிங்கன்
பிதுங்கிய துரோகத் தையே பின்பலமாய் கொண்டே
நன்னாய்ச்
சதுரங்கச் சேனை யோடே தாக்குதலைத் தொடுத்து
விட்டான்!
சிதைந்தது பாபர் படைகள்! திணறியேபின் வாங்க லாச்சு!

தோல்விகள் தொடரக் கண்டே துள்ளினான் சினத்தால்
பாபர்!
சால்கள்மேல் சால்களாகச் சாகஸியைக் கொணரச் செய்த
வால்பிடித்த அமர சிங்கன் வரையினில் வீழ்த்தான்,
கவிழ்ந்தான்!
மேல்மேலும் தோல்வி, தோல்வி வென்றதே ரானா சேனை!

கண்ணிமைக்குள் தன்னை வைத்தே காத்தரண்செய்து
வந்தத்
திண்ணுறு தடந்தோள் வீரன், செஞ்சோற்றுக்
கடனுணர்ந்தோன்
கண்ணியன் காசிம் கானைக் கடும்போதை வெறியால்
பாபர்
மண்ணிலே உதைத்துத் தள்ளி வாளினால் மாய்த்தே
விட்டான்!

கனுவாவின் முற்று கையில் கல்வினான் மண்ணை பாபர்!
இனியநல் சகாக்க ளையும் இணையிலா வீர ரோடே
பனைஎனக் குவிந்த செல்வம், படைபொருள் அத்த னையும்
வினையாக வந்த மதுவால் விரைவிலேஇழந்தான்,
சோர்ந்தான்!

அடக்கியே ஆளவந்தான், அடங்கியே முடங்கி விட்டான்!
"படைக்கலம் தோற்க வில்லை- பாபியாம் நான்தான்
தோற்றேன்!
அடைக்கலம் கேட்கும் பொல்லா அவக்கேடும்
எனக்கே யன்றோ?
மடையனாய்ப் போனேன்!" என்றே மருகினான்,
மறைத்தான் கண்ணீர்!

இத்தனைபெரும் தோல்விகட்கும் இழப்புக்கும்
இன்னல்கட்கும்
மொத்தமாய், ஏகமாய், மூலகா ரணமாய் ஆன
சத்துருதான் ஒன்றே- இதுதான் சாகஸி வடிவில் வந்தே
புத்தியைக் குடித்த சைத்தான் புதுமதுதான் என்றே
கண்டான்!

கடைசியாய் அமர சிங்கின் கையில்தான் மோதிரம்
தனைக்கொடுத்தே
படைகளும் தானும்பெற்ற மதுநிறை சாகஸியை
கடகடவெனவே கீழே சாய்த்தே காலாலே உருட்டித் தள்ளி
அடலேறாய் முழங்கினான்- "ஆண்டவனே
பொறுப்பாய்"! என்றான்

"இக்கணம்முதல் நான்தான் மதுவை ஏறெடுத்தும் பாரேன்!
சக்தியைப் புத்தியைக்கொல்லும் சைத்தானைச்
சாராயத்தை
மக்களும் நெருங்கிடாமல் மனதார வெறுத்தொதுக்கக்
தக்கதெலாம் செய்வேன்; உய்வேன்; சத்தியம்!"
என்றான் பாபர்.

சத்தியம்செய்த அவன்தான் சபதத்துடன் நிற்கவில்லை!
மெத்தவும் ஆசை யாக விலையுயர்ந்த பொன்னால்
வார்த்து;
ரத்தினங்கள் வைத்திழைத்த ஆறேழு கூஜாக் களோடே
அத்தனைமதுக் கோப்பைகளையும் அப்போதே போட்டு
டைத்தான்!

தோற்காத பாபர் எனையே தோற்கவே செய்த பேயே
நாற்கால்கொள் பிராணியாக நல்லவர் தமையும் ஆக்கும்
தாற்காலிக சைத்தானே போ ! போ !'' என்றே
நாற்காலி மேசைகூட நடுங்கவே கூச்சலிட்டான்!

வெள்ளியால் பொன்னால் மற்றும் வெறும்பித்தளை
யாலே செய்த
கள்ளூற்றும் கிண்ணம் கோப்பை ; கவின்சித்திர
சாடியனைத்தும்
அள்ளியே நசுக்கி நொறுக்கி அங்கேயே தான மாக
வள்ளி சாய் எளியோர்க் கெல்லாம் வழங்கியே
அமைதி கொண்டான்

படைபலம் இழந்தபோதும் பகுத்தறிவுத் தெளிவினாலே
கெடுமதிதனைக் கொடுத்துக் கீர்த்தியை; வலிவை அழிக்கும்
கொடுமதுவால் தன்னை வென்ற குறுக்குவழி ரானா சங்கன்
நடைமுறை ஞானம் தன்னை நனிவியந்தே போற்றலானான்

மதுவினால் புழுதி மீதே மண்டியிட்டு வாளைப் போட்டே
பதவியைப் பவிசைத் தீர பராக்கிரமம் தன்னை இழந்த
சதுரங்கப்படையோர் பாபர் சபதத்தைத் தாமும் ஏற்றே
எதுவந்த போதும் மதுதான் எம்பக்கம் இனிவரா தென்றார்

'பானையில் வந்த மதுவோ; பாளையில் வடியும் கள்ளோ;
தேனெனும் திராட்டைச் சாறோ திரவியக்

காய்ச்சலோ எதுவும்

ஆனையைப் பூனையாக்கும் அரக்கன்தான் சைத்தான் தானே
ஏன்அது?' என்றே கேட்கும் கனுவாதான் இன்றும் பாடம்!

-----------

அலெக்ஸாண்டர் வெற்றித் தோளின்
அகங்காரம் கசங்கா நேரம் !
சலிக்காத விளையாட் டாக
தர்மத்தை நசுக்கிப் போட்டே
அலைக்கூட்டம் போன்ற படைகள்
அவன்குரலின் ஆணை ஏந்த
உலைக்கூடம் நெருப்பாய் உறுமி
பாரதத்தை உலுக்கும் வேளை

மண்ணாசை வெறிபி டித்து
மாவையம் தனையே விழுங்கக்
கண்ணோட்டம் விட்டு ரத்தக்
கதிரவனை கருக்கல் தோறும்
பண்பாடி வரவேற் றுத்தன்
பராக்கிரம ருசியில் திளைத்துக்
கொண்டிருந்த அலெக்ஸாண்டருக் குள்
குரூரமாம் ஆசை ஒன்று!

தளவாடக் கொடுமை யாலே
தன்னிரு கால்க ளுக்குள்
அளவற்ற வீரர் தம்மை ;
பாரத ஆன்றோர் தம்மைக்
குளமான விழிக ளோடே
குவியவே செய்து விட்டான்!
இளகாத இரும்புத் தூ ணும்
அருகம்புல்லாய் லாயிற் றவனால்!

அந்தநாள் பாரத தத்தின்
அற்புதத் துறவி களுக்குள்
விந்தையாம் செயல்கள் மிக்கார்
மெய்ஞானி ; யோக வீரர்;
சித்தாந்த புகழில் மிகுந்த
சித்தாராம் தண்டா மிஸ்ஸை
அந்தரங்கமாய் சந்திப் பதற்கே
அலெக்ஸாண்டர் ஆசை கொண்டான்!

சேனைகளை நடத்து கின்ற
தீரர்களில் தலைசி றந்தோன்
யானையைக் கூடத் திருடி
இருட்டுப்பூ னையாய் ஆக்கிப்
பானைக்குள் தள்ளு கின்றப்
பக்குவ அறிவு நிறைந்தோன்
ஒனஸிக் ரேட்டஸ் தன்னை
உடனழைத்துச் சொல்லப் போனான்.

“நண்பனேகேள்! அன்றோர் காலை
நம் முகாமில் சிகிச்சை செய்ய
கண்ஒன்றில்லா குட்டி யோகி
கைதியாய் வந்தான் அன்றோ?
மண்கட்டியை வைத்துக் கொண்டு
மகாஜாலம் செய்திட் டானே !
புண்ணாற்றும் பச்சி லையின்
பூடகம் சொன்னான் அன்றோ?

அன்னவன் மூலம் அவன்றன்
சித்தாராம் தண்டா மிஸ்ஸின்
பன்னரும் சக்தி பற்றிப்
பராபரியாய்க் கேள்வி பட்டேன்!
சின்னவனே இவ்வா றென்றால்
பெரியவன் சித்து களுக்குள்
பொன்னாக்கும் வித்தை யதுவும்
நிச்சயம் புதைந்தி ருக்கும் !

கொண்டுவா, அவனை இன்றே!
குளுமையாய் ஆளை இழுப்பாய்!
மண்டைக்குள் அவன்வைத் திருக்கும்
மகாமந்திர தந்தி ரங்கள்
சண்டைகள் முடிவ தற்குள்
நமதுடைமைச் சரக்காய் ஆக்கிக்
கொண்டுபோய் விடுவோம்; பிறகோ
குன்றெலாம் தங் கமாகும்!''

என்றிட்டான் அலெக்ஸாண் டர்தான்
எள்ளென்றால் எண்ணெ யதனை
நின்றிட்ட இடத்திலேயே
நேர்க்கொணரும் திறம்ப டைத்த
ஒன்றியதோர் புத்திக் காரன்
ஒளஸிக் ரேட்டஸ் உடனே
பன்றியைப்போல் கனைத்துக் கொண்டே
பறந்திட்டான் பணியை முடிக்க!

வெகுதொ லைவில் காட்டின் நிழலில்
வேங்கையது இடது பக்கமும்
வெகுசா துவாம் மானின் குட்டி
வலதுபக் கமுமாய்க் கொஞ்சத்
தகத்தகாய ஒளிமு கத்தில்
சாந்தமய விழிகள் மின்ன
முகிழ்த்திட்டப் புன்னகை யோடே
முனிவரையே கண்டான் ரேட்டஸ் !

வேந்தனாம் அலெக்ஸாண்டர் பற்றி
வினயமாய் எடுத்து ரைத்தான் :
''ஏந்தலே! ஞான சித்தா!
அனைத்துமே அறிந்தோர் தாங்கள்!
வேந்தர்களின் வேந்தன் யுத்த
வீரத்தின் பராக்கிர மத்தின்
காந்தத்தின் பெயரே எங்கள்
காவலன் அலெக்ஸாண்டர் காண்பீர்!

தன்சுட்டு விரலின் அசைவில்
தரணியையே ஆளு கின்ற
மன்னன்தான் உமையே காண
மனத்திலோர் ஆசை கொண்டான்!
பொன்மகளே அவன்வடி வத்தில்
பூமாலை சூட்டு தற்குத்
தன்கரம் நீட்டு கின்றாள்
தயங்காதீர்! புறப்படும் !''என்றான்.

பொய்பேசா மௌனி யாகி
வந்தவனை அலட்சி யமாக
சாய்வாகப் பார்த்த வாறே
தண்டாமிஸ் புன்ன கைத்தார் !
பாய்போட்டே அமரச் சொல்வார்;
பயப்படுவார் என்றி ருந்த
மாய்மாலன் ஒனஸிக் ரேட்டஸ்
ஒரேடியாய் ஏமாந் திட்டான்!

மாமன்னன் அலெக்ஸாண் டர்தன்
மகத்தான தளப தியையா
சாமானிய பிச்சைக் காரத்
தண்டாமிஸ் அவம திப்பது?
ஏமாந்தா போவது? போனால்
எரிமலையே வெடித்தாற் போல
கோமாதான் கொதிகொதிப் பானே
கொல்லவும் தயங்கி டானே?

இவ்வாறாய்த் தன்னுள் எண்ண
இழைபின்னிய ஒனஸிக் ரேட்டஸ்
ஒவ்வாத மொழிகள் கூறி
உள்சினத்தை உமிழ லானான்!
ஐவ்வாது தனையே பார்த்துச்
சாணிதான் பழித்திட்ட தேபோல்
அவ்வாறு நடந்த போதும்
அரைச்சிரிப்பே சிரித்தார் சித்தர்!

சித்தரின் அரைச்சி ரிப்புத்
தீயாக அவனைப் பொசுக்க
கொத்தவே வந்தான் போன்று
கொ லைக்கருவி தனையே தூக்கி
மொத்துவது போல விரைவாய்
முனிவரின் அருகே சென்று
கத்தினான் ஔஸிக் ரேட்டஸ் !
கடுஞ்சினத்தில் துள்ள லானான்!

"ஏய்மூடக் கிழவனே கேள்! கேள்!
எழுந்திட்டே என்பின் னாலேயே
காவலனைக் காணவே வருவாய்!
காசுபணம் நிறையக் கிடைக்கும்!
ஆவலே கிடையாதா உனக்கு?
அஞ்சாதே! மறுத்திட் டாலோ
சீவியேவிடு வான்உன் தலையை
சீக்கிரமே கிளம்படா!" என்றான்.

அடுத்தசில வினாடி களுக்குள்
அண்டமே நடுந டுங்க
வெடித்ததே ஓர்சி ரிப்பு!
வேங்கையும் மா னும் கூட
"இடுங்கள் கட்ட ளையை
இமைப்போதில் இந்தப் பயலை
பொடிப்பொடியாய் ஆக்கு கின்றோம் !"
என்பதுபோல் பார்த்தன சினத்தால்!

"யாரடா மன்னன்? உண்மை
இன்னுமா விளங்க வில்லை?
நீரதாய்- நெருப்பாய்க் காற்றாய்
நிலமண்ணாய்ப் புனலே யாகப்
பரந்துள்ள அரசாங் கத்தின்
பேரரசன் ஒருவ னேதான்,
அவன்பெயர்தான் கடவுள் ஆகும் !

தீயதோர் சுயந லத்தால்
திமிரினால் ஆண வத்தால்
பேயாக மாறி ரத்தப்
பிரளயமே நடத்து கின்ற
காயான நெஞ்சுக் காரன்
அலெக்ஸாண்டர் வாழ்வு பற்றி
மடையனுக்கே ஞானம் இல்லை

உன்போன்ற ஆசாமி கட்கே
அலெக்ஸாண்டர் 'உலக மன்னன்!'
பொன்னாசை; மண்ணைப் பெருக்கும்
பொல்லாத நெருப்பு; எண்ணெய்
மின்போன்ற கொடி யிடையாள்
மேனியிலே காம விருந்து
தின்கின்ற அழுக்கு ஆசை
சேர்ந்தவனா தேவ மைந்தன்?

தேவனின் பிள்ளை என்றும்
தெய்வீக அம்ச மெல்லாம்
காவலன்அலெக் ஸாண்டர் பெற்ற
கட்டைவிர லுக்குள் அடக்கம் !
சாவற்ற புகழோன் என்றும்
துதிபாடித் தீர்க்கி ன்றாயே!
நாவறளக் கத்து கின்றாய் !
நான்கூறு வதையும் கேளேன்'

உயிர்வதை செய்வோன் எவனும்
உண்மையில் மனிதனே ஆகான்!
பயிர்விதையைத் தின்றால் கூடப்
பாவமாய்க் கருதும் எங்கள்
உயிர்சித் தாந்தம் எல்லாம்
உங்களுக்கா புரியும்? தூசு
மயிர்க்குப்பை போல மக்களை
மதிப்போனா தேவ குமாரன்?

கொலைரத்தம் குடித்துச் சுவைக்கும்
குரூரமா வீர மூச்சு?
மலைதாண்டி கங்கை என்னும்
மாநதியைக் கூடத் தாண்டி
தொலைதூர நாட னைத்தும்
சூழ்ச்சியால்; அதர்மத் தாலே
வலைபோட்டு பிடித்துக் கொள்ளும்
வஞ்சமா தெய்வாம் சமாகும்?

அரசனாய் அலெக்ஸாண் டர்தான்
இருந்தாலும் என்றோ ஓர்நாள்
மரணத்தின் தாடைக் குள்ளே
மடியத்தான்வேண்டும் அதனை
சரஸங்கள்; சாக ஸங்கள்
தடுத்திட முடியா தன்னோ?
மரணத்தைப் போரால் கொடுத்தான்
மரணத்தால் கொல்லப் படுவான்!

"அலெக்ஸாண் டர்தான் என்றன்
அளவிலே துரும்பே யாவான்!
இலக்குகளாய் போரைக் கொள்ளோன்
இராட்சசனே! மனிதன் அல்லன்!
தலைக்கணம் என்ற பறவை
தரிப்பனவெலாம் மெழுகுச் சிறகுகே
இலைத்துளிர்கள் தாங்கும் வெப்பமும்
அச்சிறகுகள் தாங்க மாட்டா!

இதோபார்! விழிகள் திறந்து !
எழில்ததும்பும் வஸந்த ருதுவின்
மதுமலரின் புன்ன கைக்குள்
மன்னனின் கர்வம் உண்டா?
புதுப்புதுக் கனிகளின் குடும்பம்
பொழிந்திடும் அமுத ரசந்தான்
இதயமே மரத்து விட்ட
அலெக்ஸாண்டரால் தரவா முடியும்?

போதும்போ! போ போ! அப்பால்!
பூந்தென்றல் கவிதை சொல்லும்
மாதுளம் முத்து: வண்ண
அந்தியின் மேகம் ; மலைகளின்
நீதிபோல் உயர்ந்த முகட்டை
நித்தமும் மஞ்ச மாக்கும்
ஜோதியாய்க் கதிர்வி ரிக்கும்
சூரியனின் விருந்தும் அழைக்கும்.

வான்மலடு ஆன போதும்
வையத்தின் வேட்கை நீக்கும்
தான்மலடு ஆகேன் என்றே
சலசலக்கும் ஜீவ ஆறு!
மான்தூ க்கம் ! மயிலின் தூ க்கம்!
மதித்திடும் அமைதி கொண்டே
தேன் தூங்கும் மலர்க்கு லத்தால்
தினம்மணக்கும் பரண சாலை!

இவைகள்தாம் என்றன் சொத்து
எல்லாமே எனக்கேசொந்தம்!
நகைகளே அற்ற தான
நல்லற வாழ்க்கை வெற்றி !
கொட்டியே கொடுத்த போதும்
அவைஎனக்குப் புழுதி தூசி
அரசினிடம் சொல்வாய் சொல்வாய்

அஞ்சிடநான் கோழை இல்லை !
அஞ்சுபவன் அறிய நானோ
பிஞ்சுப் பிழை கூட ஒன்றும்
புரிந்திடவே இல்லை மன்னனைக்
கெஞ்சிடவோ தேவை இல்லை!
கிரீடமுடி செருக்க னைத்தும்
பஞ்சாகப் பறந்து போகும்
பட்டாளம் மந்தை யாகும்!

மன்பதையை வதை கொ டுக்கும்
வாள்வியைாட் டெல்லாம் பொல்லா
வன்முறைகள்; ரத்த மோக
வரலாறெல்லாம் இனிமேல் வேண்டாம்
பொன்மலைகள் குவிப்ப தெல்லாம்
பொய்வெற்றி அன்பால் அருளால்
தன்மனத்தை வென்று ஈர
தருமத்தைச் செய்யச் சொல்வாய்!

வெறும்மனிதன் அலெக்ஸாண் டருக்கு
வேடந்தான் அரசன் பதவி!
எறும்புக்கும் தீமை செய்யா
இதயமுளான் எவனோ அவன்தான்
பெருங்கடவுள்! அருளின் தேவன்!
பீடுபெற அவனை யேநான்
இருகரங்கள் கூப்பிக் கூப்பி
என்றென்றும் தொழுவேன்! துதிப்பேன்!

அப்பனே தண்டா மள்தான்
அலெக்ஸாண்டர் பரிசை எல்லாம்
குப்பையாய்க் கருது கின்றான் !
கூட்டிவா மன்னனை என்பால் !
உப்பிட்டப் பாலாய் முறிந்த
அலெக்ஸாண்டர் உளத்தை மாற்றி
இப்புவியே வியக்கும் வண்ணம்
யான்பரிசு வழங்கு கின்றேன் !

சரிசரி இனிநிற் காதே!
சக்கர வர்த்தி உன்னை
சரியாசனம் கொள்ளச் செய்ய
தந்திட்ட இலச்சி னையை
வரும்வழியில் ஆற்றின் வெள்ள
வாய்க்குள்ளே இழந்தாய் அன்றோ?
தகுதிமேல் அதனை இங்கே
தரித்துக்கொள் போய்வா!'' என்றார்.

தண்டாமஸ் கடைசியாய் சொன்னதும்,
தங்கமுத் திரையைத் தந்ததும்
கண்டிட்ட ஒளஸிக் ரேட்டஸ்
கலகலத்துத் திகைத்துப் போனான்!
தண்டனிட் டேமுனி வனான
கோவனாண்டி சாதுவை வணங்கிச்
சண்டைமுகாம் திசையை நோக்கிச்
சடுதியில் மறைந்து போனான்!

----------

கீழுறங்கும் சூரியனைக் காணும் தோறும்
'கிர்ரென்றே நாரதனின் ஆத்தி ரந்தான்
ஏழுலகும் இரைதேடிக் குமுறு லாச்சு!
இருகால்கள் தள்ளாட அலைய லானான்'

கலகமின்றி நாள்ஒன்று கழிய லாமா?
கடுகடுத்தான் சீக்கிரத்தில் கலகம் செய்ய!
வலைவீசி ஆகத்தான் வேண்டும் இன்றேல்
வரும்கேடு, தோல்விஎன நொந்தான் முனிவன்!

அந்நாளில் அரைநாளும் கழிந்து, வானம்
அந்தியதன் அலரிப்பூ வர்ணம் காட்ட
முந்நாளில் தான்பெற்றச் சாபம் பற்றி
முனிவனுக்கு நினைவேறக் குழம்பலானான்

சஞ்சார முனிவனுக்கே 'பயணம் செய்யும்
சங்கீத யாழினுக்கே' அந்நநாள்தான்
நஞ்சான சோதனைநாள்! தனக்கே எட்டில்
சந்திரன்தான் உலவும் நாள்! அதைம றந்தான்!

அத்தருணம் நாரதன்தான் பூலோ கத்தின்
அலைகடலின் கரையோரம் நடந்து வந்தான்.
மெத்தென்றே சதசதக்கும் ஈர மணலின்
மேலாகப் புதைந்திருத்த 'ஒன்றை'க்கண்டான்!

இடதுகால் விரலாலே, விளையாட் டாக
இடறிட்டான் அப்பொருளை நார தன்தான்!
குடல்குமுட்டும் அருவறுப்பு! மண்டைஓடு!
கோரைப்பல் வாய்திறந்து கிடந்த தங்கே!

கலகமுனி அம்மண்டை ஓடு தன்னைக்
காரணமே இல்லாமல் வெறித்து வெறுத்து
சிலநிமிடம் பாாத்திருந்தான்! மனிததேகச்
சிதிலத்தின் ஒருபகுதி! சாவின் எச்சல்!

ஒருவனுக்கும் ஒருத்திக்கும் பிள்ளை யாக;
ஊழ்வினையின் ரூபமாக வாழ்வு கண்டு
நிருபமில்லா அறிக்கையிலா அதிகா ரத்து
நிர்வாகிக் காலன்கை வீழ்ந்த 'மனிதம்!'

நாரதனின் தெய்வீக விழிக ளுக்குள்
நரமனிதன் கபாலத்தில் வளர்ந்தி ருந்த
பேரதிசயத் துணுக்கொன்று மின்ன லாச்சு!
பிரம்மலிபி! விதிநியதிக் கதைச் சுருக்கம்!

புதுப்பொம்மை தனைக்காணும் குழந்தை போலப்
பொங்கிற்று வியப்பார்வம் முனிவ னுக்கே!
கொதிப்படங்கித் தனைமறந்து அக்கபா லத்தில்
குறித்திருந்த செய்திகளைப் படிக்க லானான்!

'நெருப்பைப்போல் சுடுகின்ற நீங்கா வறுமை
நிரம்பியதோர் குடும்பத்தில் இவன்பி றப்பான்!
பருப்புக்கும் அரிசிக்கும் கதியேஇன்றிப்
பகல்திருட்டு நிபுணனெனப் பெயரெ டுப்பான்!

அஷ்டமத்துச் சனியுடனே ஆறில் வியாழன்
ஆள்கையிலே இவன்கைகள் விலங்கைப் பூணும்!
துஷ்ட னெனப் பத்தாண்டு சிறையின் வாசம்
துரைத்தனத்தார் இவனுக்கே கொடுத்து வைப்பார்!

*சிறைதப்பி ஓர்நாள்தான் இந்தத் தீயோன்*
*சீறுகின்ற புயல்இருட்டில் கடலின் ஓரம்*
*மறைவதற்கே முயன்றிடுவான் ஆனால் அந்தோ*
*மச்சவிஷ முள்குத்தி மரணம் எய்வான்!*

இத்தகைய மாபாவி கொடியோ னுக்கும்
இறப்புக்குப் பின்னாலே சிறிதே யோகம்
மெத்தபுகழ் ஆன்றோனால் ஓர்நாள் கிடைக்கும்
விளக்குநெய் கோவிலுக்குத் தந்த தாலே!'

கபாலத்தில் வரைந்திருந்த பிரம்ம கிரந்தக்
கதைஇதுதான்! மும்முறைகள் மீண்டும்மீண்டும்
அபாரக் கவனத்துடனே படித்த முனிவன்
ஆச்சரியத் திகைப்புக்குள் ஆழ்ந்து விட்டான்!

பட்டென்றே நாரதனின் மூளைக்குள்ளே
பளிச்சிட்ட விஷமத்தின் ரேகை மின்ன
சட்டென்றே அம்மண்டை ஓடுதன்னைத்
தன்கையில் பத்திரிமாய் ஏந்திக்கொண்டான்!

தனக்குற்றே பலமாக நகைத்துக் கொண்டான்!
தலைஎழுத்தை எழுதுகின்ற பிரம்ம தேவன்
தனக்கின்றுத் தலைவணங்கிக் குனியப்போகும்
சம்பவத்தைக் கற்பனையால் நெய்தே களித்தான்!

அடுத்தசில வினாடிக்குள் பிரம்ம லோகம்
அடைந்திட்ட நாரதன்தான் அட்ட காச
இடிச்சிரிப்புச் சிரித்திட்டான்! பிரம்ம தேவன்!
எதிர்வைத்தான் கபாலத்தை! மேலும் சிரித்தான்!

எப்போதும் பிரம்மனிடம் நார தனுக்கே
எதிர்வாதம் செய்வதிலோர்கொள்ளை ஆசை!
தப்பேதும் நான்முகன்தான் தவறி செய்யும்
தருணமதும் வராதாஎன ஏங்கி நின்றான்!

நான்முகனின் கையெழுத்தை தலையெழுத்தாய்
நரர்களுக்கே விதிசமைக்கும் சிருஷ்டித் தொழிலின்
பான்மையினை நாரதன்தான் கொஞ்ச மேனும்
பாராட்டும் வழக்கமிலை வெறுத்தும் வந்தான்!

நாரதனின் உள்எண்ணம் பிரம்ம னுக்கும்
நன்றாகத் தெரிந்ததுதான்! இதனால் எல்லாம்
பாருலக மாந்தர்களின் விதியை வரையும்
பணிபுரிய நான்முகன்தான் தயங்குவானா?

தோற்றாயா? நான்முகனே? லட்சம்கோடித்
தொடர்கின்ற தொகைகளிலே நரர்க ளுக்கே
ஏற்றதொரு தலைஎழுத்தை வரைவ தாக
இறுமாப்புக் கொண்டாயே? இங்கே பாராய்?

இம்மண்டை ஓட்டினிலே நீதான் வரைந்த
யோகத்தின் இலட்சணத்தை பிறவி முடிந்தும்
இம்மானுடன் தனக்குமொரு பேறுகிட்டும்
என்றென்றே கிறுக்கிவைத்தாய்? உண்மைதானா?

எத்தனையோ வருஷங்கள் ஓடிப் போக
இம்மண்டை ஓடதுதான் காண்பார் இன்றி
நத்தாக தீண்டாத வஸ்துவாக
நாறிப்போய்க் கிடப்பதுதான் யோகம் போலும்!

இனியென்ன யோகமுண்டு, பிரம்ம தேவா?
இறந்தொழிந்து ஜடமாகச் சகதிக் குள்ளே
''மனிதத்தலை என்கின்ற ஓர்அடை யாள
வடிவுடனே கிடப்பதுவா யோகும் ஆகும்?''

என்றெல்லாம் எக்காளக் குரலில் முழங்கி
எகத்தாளம் செய்திட்டான் நார தன்தான்!
என்றும்போல் அமைதியுடன் பிரம்மதேவன்
இளஞ்சிரிப்பு உதடேறக் கூற லானான்:

''மிகநன்று நாரதரே, தங்கள் வாதம்
மேலும் மகிழ்வுடனே நன்றி கூறி
புகல்கின்றேன் சிலவார்த்தை தயவு செய்து
பொறுமையுடன் கவனமுடன் கேட்பீர் ஐயா!

புங்கவனே! முக்காலம் தனையு ணர்ந்த
புனிதமிகு ஆன்றோனே இந்த நாள்தான்
தங்களுக்கே ஆகாத நாளாம்! கருமம்
சாடுவதால் வீணாகத் தோல்வி கண்டீர்!

யோகமெனின் பொன்பொருளின் குவியல் தானா?
மூவிரண்டாம் அவையூறும் உண்டி தானா?
வைரமணி வைத்திழைத்த சுவர்கள் மின்னும்
மாளிகையின் பூமெத்தை வாசம் தானா?

கைச்சுட்டு விரலாலே அதிகா ரத்தைக்
காட்டுகின்றத் தனிஆணை மிடுக்கு தானா?
மையிட்டு விழியாலே மாதர்தம்மை
மயக்குகிற கலைதன்னில் திளைத்தல்தானா?

பளபளக்கும் பட்டுரையின் ஆப ரணங்கள்
பதிரியெனச் சுடர்வீச தேகம் காட்டும்
வளமானப் பருவமதாம் வாலி பத்தின்
வயணத்தில் மட்டுந்தான் யோக முண்டா?

யோகமதே புண்ணியத்தின் பரிசு! அதுதான்
யாவருக்கும் சிறிதேனும் எப்போ தேனும்
ஆகிவரும் நாள்வந்தால் வந்தே தீரும்!
அட்டவணை மாற்றிமிலை! தவறிடாது!

கீர்த்தியதே அறியாத ஈனப் பிறவி
கெட்டலைந்தே நரனொருவன் மண்டை ஓட்டை
பேர்த்தெடுத்தே என்னிடத்தில் கொண்டு வந்தப்
பெரியோரே! யோசியுங்கள்! யோகம் இதுதான்!

துங்கமணி நாரதனின் கைகள் தொட்டுச்
சுமப்பதற்கும் நான்முகனின் சன்ன திக்கே
பங்கமின்றி வருவதற்கும் இக்கபாலந்தான்
பாக்கியந்தான் எவ்வளவு செய்தல் வேண்டும்!

இதுவொன்றே போதாதா நான்வ ரைந்த
யோகத்தைக் குறிப்பதற்கு? இன்னும் என்ன
புதுயோகம் இவனுக்கே கிடைக்க வேண்டும்?
போய்வருவீர்! விதிஎழுத்தே வெற்றி எழுத்தாம்!

வேதனவன் விளக்கத்தைக் கேட்ட பின்தான்
விதிக்கிரந்தம் மாறாது என்ப தையே
கீதமுனி உணரலானான்! உணர்த்த லானான்!
கிஞ்சிற்றும் யோகமிலாப் பிறவி ஏது?

-----------

'அதிருஷ்ட தேவதை'
தவறுதலாய் ஓர்நாள்,
"தர்ம தேவதையின்
வீட்டில் புகுந்தது.
வந்த அதிருஷ்ட
வனிதையை முறையுடன்
உபசரித்த பிறகு
உலகா யதமாய்
தர்ம தேவதை
உரையாட லாச்சு!
தாழ்த்திய தலையை
நிமிர்த்தி டாமலே
அதிருஷ்ட தேவதை
தர்மத் தாயின்
கேள்விகளுக் கெல்லாம்
பதில்கள் தந்தது

'அதிருஷ் டத்திடம்
தர்மத் துக்கு
நீண்ட நாட்களாயச்
சற்றேக் கோபம்!
அழுக்கு மனசும்
நீளாக் கைகளும்,
பொய்மை நாக்கும்
கொண்ட வரிடத்தும்

அதிருஷ்டம் வந்தே
கொஞ்சிக் குலாவுதல்
தர்மத் தாய்க்குச்
சகிக்கவே இல்லை!
அதனைச் சுட்டி
அக்கினி சொற்களால்
அதிருஷ்ட தேவியை
கண்டிக்க லானாள்!
அதிருஷ்டமோ சிறிதும்
அசரவே இல்லை!
கோபமோ வெறுப்போ
கொள்ளவே இல்லை!
சிலம்பெனச் சிரித்தான்!
தேனின் சாரலாய்ச்
சொற்களைத் தூவினான்:

''அக்கா அக்கா!
தர்ம தேவி!
நீயோர் அசடு!
நீதியும் நியதியும்
உளது நேத்திரங்கள்!
சாகாத சத்தியம்
என்பது ஒன்றே
உனது ஜோதி!
இதய மாகும்

காலமும், ஒழுங்கும்
உனது கைகள்!
உனது ரத்தமோ
ஒழுக்க சீலம்!
கருணை, அன்பு
காருண்ய மெல்லாம்
உனது மேனியின்
நாடி நரம்புகள்!
ஈஸ்வர நினைவே
என்றும்நீ உண்ணும்
ஒரேஒரு உணவு!

'கொடுப்பது' என்பதே
உனது வாழ்வு!
'எடுப்பது' என்பதை
அறியவே மாட்டாய்!
இதனா லன்றோ
உன்னைப் பற்றி
ஓசையே இல்லை'
'இருக்கிறாய்நீ' என்பதை
எங்கோ, யாரோ
சிலபேர் அறிவார்!
அப்படி அறிந்த
'அந்தச் சிலரும்'
தத்துவம் பேசும்

தருணமே உன்னை
நினைத்துக் கொள்வார்!

ஆனால்-
எனக்கோ-
அதிசய அலுவல்கள்!
ஆயிரம் பணிகள்!
கடித்த உதட்டின்
எச்சிலில் இருப்பேன்!
காலிக்கோப்பையில்
கள்ளாய் ஊறுவேன்!
மதுவகை களாக
அவதாரம் எடுப்பேன்!
'படித்தவன்' கண்ணீர்
வடிக்கும் போது
பார்த்துப் பார்த்துப்
பரிகாசம் செய்வேன்!
'கெடுத்தவன்' வீட்டுக்
குப்பை மேட்டிலும்
சதங்கையைக் குலுக்கி
சதிர்கள் ஆடுவேன்!
ஊமை வாயையும்
ஒலிமுர சாக்குவேன்!
சாமான் யனையும்
தங்கக் கட்டிலில்

தூங்க வைப்பேன்!
சிந்தனை செய்வதும்
சீர்தூ க்கிப் பார்ப்பதும்
எனக்கு ஆகாது!
வரம்புகள், வரப்புகள்
வாரா வதிகள்
அனைத்தும் எனக்கே
ஆகாத எதிரிகள்!
காலமோ இடமோ
கணக்கோ, வழக்கோ
இருட்டோ வெளிச்சமோ
எனக்கே இல்லை!

இஷ்டம் என்றால்
ஆயிரம் கைகளால்
அணைத்துக் கொள்வேன்!
அள்ளிக் கொஞ்சுவேன்!
வியர்க்கும் வரையில்
விளையாடித் தீர்ப்பேன்'
கயிறு அறுந்த
காற்றாடிபோல
சட்டென மறுகணம்
வேறொர் பக்கம்

ஓடிப் போவேன்!
ஒதுங்கியே வெறுப்பேன்!

'பாதி' தின்று
பாதியை இழந்தவர்
திகைப்பதும் உண்டு!
பகைப்பதும் உண்டு!
சட்டச் சுவர்கள்
சுற்றி நிற்கும்
இடமெலாம் என்றன்
சுவடுகள் என்றும்
பதிவதே இல்லை!
அழைக்கும் குரலை;
ஆசைக் குழைவை
அலட்சியம் செய்வேன்
வலைகளைக் கிழிப்பேன்!
வெற்றுக் கைகளில்
ரத்த விரல்களில்
நஞ்சு நெஞ்சில்
ஐந்தும் ஒன்றும்
அறவே முளைக்கா
'மரப்பாச்சு மூளை'
உள்ள இடத்திலும்
வலுவில் நானே
விழைந்து சென்று
நர்த்தனம் ஆடுவேன்!
நாடகம் போடுவேன்!
பாவம்! பாவம்!
தர்ம தேவி!

உனது அலுவலோ
ஒருசில பொழுதே!
சட்ட என்னும்
வட்டத் துக்குள்
சிலசில பொழுதே !
'இயக்கம்' என்பதே
அறியாத வள்நீ!
'மயக்கம்' என்பதே-
'மருட்சி' என்பதே-
தடுமாற்றமே உன்றன்
சகாக்கள்! துணைகள்!
அஞ்சியே அஞ்சியே
அடியெடுத்து வைப்பாய்!
ஆனால்- நானோ
இயக்கும் விதியால்
மின்சா ரந்தான்!
வேகமே என்றன்
பாதங்களாகும்!
புயலாய்ப் பாய்வேன்!

புதைமண்ணில் திணறும்
நொண்டி போலவும்
நடப்பேன்; நகர்வேன்!
'இதய அன்போ'
'மூளை அறிவோ'

எனக்கே இல்லை!
'உறவு' கொள்ளவும்
அதிர்ச்சி தருவேன்
'முறிவு கொள்ளவும்
அதிர்ச்சியே தருவேன்
இப்படித் 'தன்னைப்
பற்றி நானே'
விமர்சனம் செய்து
வெளிப்படையாகப்
பேசிய அதிருஷ்டம்
சற்றே மௌனமாய்
அடக்கமாய் இருந்தது!
'தர்மம்' கேட்டது:
"என்ன சங்கதி?
ஏன்நிறுத்தி விட்டாய்?
உன்னைப் பற்றி
இன்னும் அறிய
ஆசை எனக்கே!"
'அதிருஷ்டம்' நகைத்து
தர்மத்தின் பேச்சை
குறுக்கே முறித்து-
"பேச்சு எனக்குப்
பிடிப்பதே இல்லை!
ஏதோ கேட்டாய்,
எதையோ சொன்னேன்!

இனிமேலும் உன்னிடம்
இருந்தால் நீயும்
புதிய போதையில்
லீலைகள் புரியக்
கிளம்பி விடுவாய்!
யுகத்துக்கு யுகமாய்
இடைவெளி விட்டு
மெல்ல மெதுவாய்
உனது கைகள்
அசையத் தொடங்கும்!
ஆமாம் உன்விதி
அப்படித் தாயே!''
என்று சொல்லி

எழுந்தது அதிருஷ்டம்
''இப்போது எங்கே
போகி றாயடியே?''
என்று ஆவலாய்
தர்மம் கேட்டது.

''கொலைக்க ளத்துக்கு!''
என்றது அதிருஷ்டம்.
திடுக்கிட்ட தர்மம்
அலறிய படியே
''என்னடி உளறல்?''

என்று சீற
“உளறல் இல்லை, உண்மை அக்கா!
அரிச்சந்திர உண்மை!”
ஜனநாயகம் என்னும்
உனது தங்கையைக்
குற்றுயி ராக்கிய
கொடுங்கோல் நிழலில்;
நீதியின் கண்களில்
மருந்தைத் தூவி
தூங்க வைத்த
தூர்த்தன் ஒருவரின்
நரகக் கைகளில்,
இருட்டில் நீந்தி
இறக்கு மதயான
ஐந்துகோடி பெறுமா னமுள்ள
‘தங்க ரொட்டி’ களைத்
தரவே போகிறேன்!
அந்தத் தங்க
ரொட்டிகள் கொண்டு
இன்னும் இன்னும்
சமூக ரத்தத்தை
உறிஞ்சிவே வாய்ப்புகள்!
உதவவே போகிறேன்!
தடுக்காதே என்னை
தர்ம தேவி!

தாமதம் ஆகா!"
என்ற அதிருஷ்டம்
நின்ற இடத்தில்
ஒருசுற்று சுற்றி
தள்ளாடிய படியே
ஊர்ந்து நகர்ந்தது!
அதிசயத் தோடு-
ஆத்திரத்தோடு-
அதிருஷ்ட தேவதை
அழகு முகத்தை
உற்றுப் பார்த்த
தரும தேவதையின்
தலையே கழன்றது'
அதிர்ச்சி! அதிர்ச்சி!!

அதிருஷ்ட தேவதை
அழகு முகத்தில்
அமைந்து இருந்தவை
போலிக் கண்கள்!
பார்வை தராத
பாவலா உறுப்புகள்!
பொருத்தி வைத்த
'பொம்மைக் கண்கள்!'

----------

வாளால் உயிர்கொய்து - ரத்த
வரிகளால் கதைஎழுதி
தோளால் முரசடித்து - வெற்றித்
தோரணம் புகழ்பாட
ஆளும் மமதையுடன் - வீர
அழகு சுடர்வீச
ஏளனப்புன்னகைதான் - உதட்டில்
இழைந்திடவே அவன்வந்தான்!

மகுட யானையின் மேல் - ரத்தின
மாணிக்க அம்பாரியில்
திகழும் அணிமணியில் - கலிங்கம்
சிந்திடும் விழித்துளியும்
புகழின் சாவுகளும் - விழுந்து
புரண்டே பளபளக்க
நெகிழாக் கல்நெஞ்சம் - தன்புகழ்
நெய்திடவே அவன்வந்தான்!

வெள்ளமாய் அவன்சேனை "வெற்றி
வேந்தே!" எனமுழங்க
பிள்ளை பெண்கள்எலாம் - கண்ணீர்
பிலிற்றும் யந்திரம்போல்
உள்ளம் எனும் உறுப்பும் - வெயிலால்
உலர்ந்த சுள்ளியென
தள்ளாடும் கலிங்கத்தின் - வீதிச்
சதுக்கத்தின் அவன் வந்தான்!

ஆசைதுறந்தவர்கள் - அதனால்
அனைத்திலும் சிறந்தவர்கள்
பாச உயிர்ப்பரிவே - அன்றிப்
பாரிடை ஏதுமிலார்
நேசம் என்பதொன்றே - பணியாய்
நினைக்கும் ஏதுமிலார்
பேசாச் சிலைஎன - நிற்கும்
பிட்சுகளிடை அவன்வந்தான்!

ஊமை விழிகளிலே - வாழ்வை
உதறிய இமைகளிலே
சாம மையிருட்டு! தோல்வி
தந்தொரு பெருஞ்சோகம்!
சேமம் குலைந்துவிட்டக் - கலிங்கத்
திகைப்பின் நெடுமௌனம்!
தாம மார்புடையான் - இதயம்
தகித்ததுவே அதுகண்டே!

வெற்றிக் கையமர்ந்து - கர்வம்
வீங்கிய தாமரைதான்
நெற்றியவன் சுளிக்கையிலே - தானே
நிலத்தில் நழுவியதே!
முற்றியே கருணையதும் - தனது
முதல்கண் ணீரிட்டதுவே!
பற்றுகள் அறுந்தனவே! அருளின்
பண்ணதும் பிறந்ததுவே!

பூமியைத் தோற்கடித்தோன்! - யுத்த
புத்தியைத் தோற்கடித்தான்!
காமியாய் இருந்தவன்தான் - துறவுக்
காதலைக் கொண்டுவிட்டான்!
சேமிப்பாய் வைத்திருந்த - ரத்த
சீர்த்திகளை உதறிவிட்டான்!
சாமியாம் புத்தனின்தாள் - நிழலில்
சரண்புகவே துணிந்துவிட்டான்!

தேகம் அழியாமல் - ஆத்ம
தீதே சுட்டெரிக்க
மோகப் பிறப்பழித்தே - ஞான
மோனப் பிறப்பெடுத்தான்!
சோகம் தனையறியான் - மானுட
சோகம் தனையொழிக்க
சாகாக் குரலினிலே - அன்புச்
சாத்திரமே ஓதிவிட்டான்!

----------



என்னைவிட ஆற்றல் மிக்கவர்
கவிஞர் வ.கோ.சண்முகம்.
அவருடைய கவிதைகளில்
மின்னல் வெட்டுவது போல்
தெறிக்கும் புதிய வீச்சுக்களை
வேறு கவிஞர்களின் கவிதைகளில்
என்னால் காண முடியவில்லை.
தமிழ்க் குழந்தைகளுக்கும்
இளைஞர்களுக்கும் இவர்
படைத்த வீரியமான கவிதைகளை
முன்னிறுத்தி, 'எழுச்சிக் கவிஞர் '
என ,இவரை அழைப்பதில் நான்
பேருவகை கொள்கிறேன்.

உவமைக்கவிஞர்
*சுரதா*